# நகரத்தார் இதழ்

(பொன்னமராவதி - பொன்.புதுப்பட்டி -
வலையபட்டி சிறப்பிதழ்)

(சமூக இலக்கிய மாத ஏடு)



வலையபட்டி -
அருள்மிகு மலையாண்டி சுவாமி கோவில்

டிசம்பர் - 1989

ஓம்
தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்.
தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்

## பொன்னமராவதி - பொன்.புதுப்பட்டி - வலையபட்டி சிறப்பிதழ்

மலர்: 3  இதழ்: 7

ஆசிரியர்

**சுப. செந்தமிழன்**
5, யானைக்காரச் சந்து
மீனாட்சிஅம்மன் கோவில் தெரு,
(அம்மன்சன்னதி அருகில்)
மதுரை-1.

**டிசம்பர்-1989**
(சுக்ல - மார்கழி)

நன்கொடை ரூ. 2/-

தமிழ்நாடே வாழ்க - எம்
தாய்நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தழையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க
- புரட்சிக்கவிஞர்

மார்கழி 18 உ
2-1-90
செவ்வாய்
கிழமை

# பிள்ளையார் நோன்பு

மார்கழி 23 உ
7-1-90
ஞாயிற்றுக்கிழமை

# வைகுண்ட ஏகாதசி

---

மார்கழி 26 உ
10-1-90
புதன்கிழமை

# ஆருத்ரா தரிசனம்

## மதுரை நகர விடுதியில் பிள்ளையார் நோன்பு

மதுரை நகர விடுதியில் எவ்வாண்டும் போல் இந்த ஆண்டும் 2-1-90 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு பிள்ளையார் நோன்புக்கு இழை எடுக்கப்பெறும். நபர் 1க்கு கட்டணம் ரு 5 முன்னதாகப் பெயரை பதிவு செய்து கொள்ள வேண்டியது.

- செயலாளர்

உ
சிவமயம்

# பழநிப் பாதயாத்திரை பயண விவரம்

## ஸ்ரீபிரமோதூத வருஷம் சுக்கில ஹு தை மீ 17உ (30-1-90) செவ்வாய்க்கிழமை முதல் மாசி மீ 7 உ (19-2-90) திங்கட்கிழமை முடிய

## (21 நாட்கள்)

சுக்கில ஹு தை மீ

| | | |
|---|---|---|
| 17உ 30-1-90 (செ) | தேவகோட்டை நகரப் பள்ளிக்கூடத்தில் காவடி கட்டிவைத்து பூஜை |
| 18உ 31-1-90 (பு) | காவடிகள் நகர் வலம் வந்து சிலம்பணி பிள்ளையார் .கோவிலில் தங்குதல் |
| 19உ 1-2-90 (வி) | காலை, காவடியும் பாதயாத்ரிகர்களும புறப்படுதல் பகல் ஊத்தாங்கிணற்றில் (சங்கராபுரம்)காவடி நிவேத்தியம் இரவு குன்றக்குடி |
| 20உ 2-2-90 (வெ) | காலை,குன்றக்குடியிலிருந்து புறப்படுதல் பகல் கண்டவராயன்பட்டி கண்மாயில் காவடி நிவேத்தியம் இரவு மருதுபட்டித் தோப்பில் முதல் நாள் பூஜை |
| 21உ 4-2-90 (சனி) | காலை, சிங்கம்புணரி சேவுகப்பெருமாள் கோவிலில் காவடி தங்குதல், பகல், மணப்பச்சேரியில் காவடி நிவேத்தியம் (பாதயாத்ரிகர்கள் வெள்ளாளபட்டி வழியாக வருதல்) இரவு சமுத்திரா பட்டியில் இரண்டாம் நாள் பூஜை |
| 22உ 5-2-90 (ஞா) | காலை, நத்தத்தில் வாணியர் பஜனை மடத்தில் பானகபூஜை,பகல் உப்பாற்றில் காவடி நிவேத்தியம் இரவு, இடைச்சி மடத்தில் மூன்றாம் நாள் பூஜை |
| 23உ 6-2-90 (திங்) | காலை, திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவிலில் காவடி தங்கல்' பகல் ரெட்டியார் சத்திரத்தில் காவடி நிவேத்தியம், இரவு. நகரத்தார் ஊருணி என்கிற செம்மடைப்பட்டியில் தங்கல், நான்காம் நாள் பூஜை |

| | | | |
|---|---|---|---|
| 24உ | 6-2-90 | (செ) | காலை, செம்மடைப்பட்டியில் பானக பூஜை பகல் (ஒட்டன்சத்திரம் கடந்து) குழந்தைவேலன் சந்நிதியில் காவடி நிவேத்தியம், இரவு, அடையாளவேலை தரிசித்து கலிங்கப்பையா ஊருணியில் (சத்திரப்பட்டிசாலையில்) ஐந்தாம் நாள் பூஜை |
| 25உ | 7-2-90 | (பு) | காலை, ஆய்க்குடி பெருமாள் கோவிலில் பானக பூஜை பகல் இடும்பன்குளத்தில் நீராடி இடும்பன் மலைச்சரிவில் காவடி நிவேத்தியம் இரவு, பழநி அன்னதான மடத்தில் முதல் நாள் பூஜை |
| 26உ | 8-2-90 | (வி) | அன்னதான மடத்தில் இரண்டாம் நாள் பூஜை **தைப்பூசம்** |
| 27உ | 9-2-90 | (வெ) | அன்னதான மடத்தில் மூன்றும்நாள் பூஜை |
| 28உ | 10-2-90 | (ச) | அன்னதானம் மடத்தில் நான்காம் நாள் பூஜை மகம் நாளான இன்று பகல் இரண்டு மணிக்குமேல் புறப்பட்டு மலையில் **காவடிசெலுத்துதல்** |
| 29உ | 11-2-90 | (ஞா) | அன்னதான மடத்தில் ஐந்தாம் நாள் பூஜை தனியார் அபிஷேகங்கள். பழம்நீ பாதயாத்திரைக்குழுவின் சார்பில் பட்டக்காரர் மடத்தில் மதிய உணவு |
| 30உ | 12-2-90 | (திங்) | அன்னதான மடத்தில் அடுப்படி பூஜை' சுவாமிபுறப்பாடு தனியார் அபிஷேகங்கள் |
| மாசி | | | |
| 1உ | 13-2-90 | (செ) | மலையில் சந்தனக்குழம்பு அபிஷேகம், பாதயாத்ரீகர்கள் விடைபெற்று ஊர் திரும்புதல் |
| 2உ | 14-2-90 | (பு) | இரவு ஆறு மணி அளவில் காவடி விடைபெற்று ஊர் திரும்புதல் |
| 3உ | 15-2-90 | (வி) | காவடி வழிநடையாக ஊர் திரும்புதல் பகல் திண்டுக்கல் மலைக்கோட்டை ஐயப்பன் கோவிலில் பூஜை |
| 4உ | 16-2-90 | (வெ) | காவடி வழிநடையாக ஊர் திரும்புதல் இரவு சமுத்திரபட்டியில் பானக பூஜை |
| 5உ | 17-2-90 | (ச) | காவடி வழிநடையாக ஊர் திரும்புதல் இரவு மருதுபட்டி தோப்பில் பூஜை |
| 6உ | 18-2-90 | (ஞா) | திருப்பத்தூர் வழியாக காலை ஏழு மணி அளவில் குன்றக்குடி வந்தடைதல் இரவு பூஜை |
| 7உ | 19-2-90 | (திங்) | குன்றக்குடியிலிருந்து புறப்பட்டு தேவகோட்டை வந்து சேர்தல் |

# பொன்னமராவதி - பொன். புதுப்பட்டி - வலையபட்டி

பொன்னமராவதி – பொன். புதுப்பட்டி – வலையபட்டி ஆகிய மூன்று ஊர்களும் மிகமிக அருகில் தொடர்ச்சியாக அமைந்துள்ள ஊர்களாகும்.

புதுக்கோட்டை மாவட்டத்தைச் சார்ந்தது இந்த மூன்று ஊர்கள் புதுக்கோட்டையிலிருந்து 40 கி. மீ. தொலைவிலும், திருப்புத்தூரில் இருந்து 25 கி. மீ. தொலைவிலும், பொன்னமராவதி உள்ளது. திருமயம் வட்டத்தைச் சார்ந்தது பொன்னமராவதி மிக விரைவில் தனி வட்டமாக ஆக உள்ளது.

பொன்னமராவதி
பொன். புதுப்பட்டி
வலையபட்டி
} இந்த மூன்று ஊர்களின் பரப்பு = 3½ சதுர கிலோமீட்டர்

மக்கள் தொகை = 11,467 (1981 கணக்குப்படி)

பொன்னமராவதி பேரூராட்சிக்குள் தான் பொன். புதுப்பட்டி, வலையபட்டி ஆகிய் இரு ஊர்க்ளும் அடங்கியுள்ளன.

பொன்னமராவதி பேரூராட்சியான நாள் : 1-7-1914
முதல் தர பேரூராட்சியான நாள் : 1-1-1958
தேர்வுநிலை பேரூராட்சியான நாள்: 1-10-1983

பொன்னமராவதி பேரூராட்சியின் தற்பொழுதைய தலைவர்
K. R. முத்து அவர்கள்

பொன்னமராவதி ஊராட்சி ஒன்றியத் தலைவர் திரு. V. சுப்பையா அவர்கள்

பொன்னமராவதி ஊராட்சி ஒன்றியத்தில் 42 ஊராட்சி மன்றங்களும் ஒரு தேர்வு நிலைப் பேரூராட்சியும் அடங்கியுள்ளது.

**பொன்னமராவதி:** திருப்புத்தூருக்கு வடமேற்காக 25 கி. மீ. தொலைவில் உள்ளது.

**ஊர் பெயர் காரணம்:** பொன்னன் – அமரன் ஆகிய இரு அரசர்களால் உருவாக்கப்பட்ட ஊரே பொன்னமராவதி. பொன்னமராவதி காமராசர் நினைவு பேருந்து நிலையத்தின் அருகில் அமர கண்டான் ஊருணி உள்ளது.

**வரலாற்றுக் குறிப்புகள்:** இவ்வூரிலுள்ள வைணவ ஆலயத்திற்கு கி. பி. 1527 ல் பொன்னம்பலநாத தொண்டைமான் வீர. நரசிங்க ராயர் நிலங்கள் வழங்கியுள்ளார், பன்னிரண்டாம் நூற்றாண்டில் இவ்வூரில் பாண்டியருக்கும், சிங்களவருக்கும் போர் நடைபெற்று உள்ளது. பதினேழாம் நூற்றாண்டில் இவ்வூர் மருங்காபுரி சிற்றரசர்கள் ஆட்சியில் இருந்தது, பின் சேதுபதிகள் ஆட்சியின் கீழ் வந்தது.

**சோழீச்சுரமுடையார் ஆலயம்:** அமரக் கண்டான் ஊருணியின் அண்மையில் இந்த ஆலயம் அமைந்துள்ளது. இரண்டாம் இராச ராசசோழனால் கட்டப்பட்டது. நகரத்தார்களால் புதுப்பிக்கப் பிட்டது. அமரகண்டான் ஊருணியின் கரையில் அருள்மிகு கற்பக வினாயகர் ஆலயம் உள்ளது. இவ் ஆலயம் குடமுழுக்கு விழா ஐப்பசி 15 உ 1-11-79 வியாழக்கிழமை நடைபெற்றது.

அமரக்கண்டான் ஊருணியின் மற்றொரு கரையில் காவல் நிலையம் அருகில் அருள்மிகு விநாயகர் ஆலயம் உள்ளது. இந்த ஆலயம் ந. மு. நல்லழகன் செட்டியார் அவர்களால் கட்டப்பட்டது. பிங்கள ஆண்டு ஆனித் திங்கள் 19 உ (3-7-1977) ல் இவ் ஆலய குடமுழுக்கு விழா நடைபெற்றது.

பொன்னமராவதியில் பொன்னமராவதி ஒன்றிய அலுவலகம், சார் பதிவாளர் அலுவலகம், காவல் நிலையம், கிளை நூலகம் ஆரம்ப மருத்துவமனை, பொன்னமராவதி பேரூராட்சி அலுவலகம் அஞ்சலகம் ஆகியவை உள்ளது. சனிக்கிழமை தோறும் சந்தை கூடுகின்றது.

**தொழில்கள்:** நெசவுத்தொழில், சில்வர் பட்டறைகள், பித்தளைப் பட்டறைகள்

பொன்னமராவதி காமராசர் நினைவுப் பேருந்து நிலையத்தில் 1985 ல் நிறுவப்பட்ட P.L.பழனியப்பனார் நினைவு மணிக் கூண்டு உள்ளது.

**பொன். புதுப்பட்டி:** இவ்வூர் பொன்னமராவதியிலிருந்து 2 கி.மீ தொலைவிலுள்ளது.

பொன். புதுப்பட்டியில் பெண்கள் அரசினர் உயர்நிலைப்பள்ளி, இந்தியன் ஓவர்சீசு வங்கி, இந்தியன் வங்கி, மதுரை வங்கி, மத்திய கூட்டுறவு வங்கி ஆகியவை உள்ளது. ஐயப்புலி நாச்சியார் அம்மன் கோவில் உள்ளது.

**வலையபட்டி:** பொன்னமராவதிக்கு மேற்கே ஒரு கி. மீட்டர் தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது.

**ஊர் பெயர் -காரணம்:** இவ்வூரில் முன்பு வலையர்கள் மிகுந்திருந்த காரணத்தால் வலையபட்டி எனப் பெயர் வந்தது என ஒரு சிலரும் இவ்வூர் இறைவன் வலம்புரிநாதர் பெயரால் வலையபட்டி எனப் பெயர் வந்ததுயென ஒரு சிலரும் கூறுகின்றனர்.

அன்பினால் அனைவரையும் வளைத்துப் போடுவதால், வலையாக பின்னிப் போடுவதால் இவ்வூருக்கு வலையப்பட்டி எனப் பெயர் வந்திருக்கலாம் என்று திருமுருக கிருபானந்த வாரியார் கூறுகின்றார்

## அருள்மிகு மலையாண்டி சுவாமி

## வடிவகிர்விழியாள்உடனாய வலம்புரிநாதசுவாமி திருக்கோவில்

அழகிய சிறிய குன்றின் மீது வானளாவிய இராச கோபுரத்துடன் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோவில் அருகே திருக்குளமும், நகர விடுதியும் உள்ளது.

இங்கு மலையாண்டியாக அமர்ந்திருப்பவர் நகரத்தார்களின் குலத்தெய்வமான மரகத விநாயகர் ஆவார். இவ ஆலயம் நகரத்தார்களின் உழைப்பால் ஆர்வத்தால் கட்டப்பட்டு நந்தன ஆண்டு தைத் திங்கள் 19 ஆம் நாள், 1892 வருடம் குடமுழுக்கு விழா நடத்தப் பெற்றது. 1916 ம் ஆண்டிலும், 1941 ம் ஆண்டிலும் 1978 ஆம் ஆண்டிலும் இவ் ஆலயத்திற்கு குட முழுக்கு விழாக்கள் சிறப்பாக நடத்தப் பெற்றது.

**நகர விடுதி:** மலையாண்டி சுவாமி கோவிலின் அடிவாரத்தில் நகர விடுதி உள்ளது, இந்த நகர விடுதியில் நகரத்தார் இல்லத் திருமணங்கள் நடத்தப்படுகின்றது. இந்த நகர விடுதி மாத்தூர் மணலூர் க. மு. சு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் மகன் க.மு.சு. சி. சின்னையா செட்டியார் அவர்களால் கட்டப்பட்டு விக்கிரம ஆண்டு வைகாசித் திங்கள் 14 ஆம் நாள் (27-5-1940) அன்று திறக்கப்பட்டது. இந்த நகர விடுதியில் வலையபட்டி நகரத்தார் புள்ளி விபரம் எழுதி வைக்கப்பட்டுள்ளது.

### குறிப்பிடத்தக்க செய்திகள்

இவ்வூரில் உள்ள குறிப்பிடத்தக்க ஊருணிகள் வையாபுரி ஊருணி, ஊரின் நடுவேயுள்ள அடைக்கன் ஊருணி, க. சா. ஊருணி மற்றும் சங்கரன் குண்டு குளம் ஆகியவை இங்குள்ளது.

புகழ் பெற்ற தவுல் உலக மன்னர் வலையபட்டி சுப்பிரமணியம் இவ்வூருக்கு பெருமைசேர்த்து வரும் பெருமைமிக்க கலைஞர் ஆவார்

இவ்வூரில் திருவாதிரை தரிசன விழாவும், மகர்நோன்பு விழாவும், ஐப்பசித் திங்களில் சூரசம்ஹாரமும், தைப்பூசமும், பங்குனி உத்தரத் திருவிழாவும், மார்கழியில் ஐயப்பன் பூசையும் சிறப்பாக நடைபெறும்

## நகரத்தார் புள்ளி விபரம்

**வலையபட்டி**

(பேலப்பத்தூர் வட்டகை)

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டி கோயில் | : | 304 |
| வயிரவன் கோயில் | : | 303 |
| மாற்றூர் கோயில் | : | 323 |
| நேமம் கோயில் | : | 119 |
| இளையாத்தக்குடிக்கோயில் | : | 75 |
| இலுப்பைக்குடிக்கோயில் | : | 25 |
| சூரணிக்கோயில் | : | 19 |
| | | 1168 |

ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் புதிய புள்ளி விபரம் எடுக்கப்படுமென்று இங்கு கூறப்படுகின்றது.

வலையபட்டி நகர விடுதியில் குறிப்பு

எடுத்த நாள்: 25-11-89

**பொன். புதுப்பட்டி**

(பேலப்பத்தூர் வட்டகை)

| | | |
|---|---|---|
| இளையாத்தக்குடிக் கோயில் | = | 152 |
| இலுப்பைக்குடிக் கோயில் | = | 13 |
| வயிரவன் கோயில் | = | 201 |

**அஞ்சல் எண்கள்**

| | | |
|---|---|---|
| பொன்னமராவதி | = | 622 407 |
| பொன். புதுப்பட்டி | = | 622 408 |
| வலையப்பட்டி | = | 622 411 |

## பொன். புதுப்பட்டிக்கு

# புகழ் சேர்ப்பவர்கள்

### டாக்டர். S. சண்முகம் செட்டியார் அவர்கள்



மதுரையில் புகழ்பெற்ற டாக்டர். S. சண்முகம் செட்டியார் அவர்கள் பொன். புதுப்பட்டியைச் சார்ந்தவர்.

வெளிநாடு பலவற்றுக்குச் சென்று வந்துள்ளார். அனுபவமும், ஆற்றலும் மிக்கவர். மதுரையிலுள்ள இராமகிருஷ்ண மடத்திற்கு வேண்டிய நிலத்தைக் கொடுத்து, அதைக்கட்டி சிறப்பாக நிர்வாகித்து வருகின்றார். வாழ்க்கையில் சேவை மனப்பான்மை இருந்தால் அது மன அமைதியையும், மகிழ்ச்சியையும் தருமென்கின்றார் டாக்டர் சண்முகம் செட்டியார் அவர்கள்

---

### நாக. இராம. இராமசாமிச் செட்டியார் அவர்கள்

பொன். புதுப்பட்டியைச் சார்ந்த இவர் நற்பணிகள் பல புரிந்து உள்ளார். இவர் செய்துள்ள சேவைகளைப் பாராட்டி குலாலூர் மடம் இவருக்கு 26-9-88 அன்று அறமனச் செம்மல் பட்டம கொடுத்து சிறப்பித்தது.

---

### பழம் நீ கவியரங்கம்

நாள் : **7-1-90**

கிழமை : ஞாயிறு

காலம் : மாலை 6 மணி

இடம் : மதுரை வடக்கு ஆடி வீதி, திருவள்ளுவர் கழகம்

தலைவர் : தமிழாகரர் முனைவர் – திரு. சுப. அண்ணாமலை அவர்கள்

6-1-90 சனிக்கிழமையன்று மாலை 6 மணிக்கு வடக்குச் சித்திரை வீதியிலுள்ள நகர விடுதியில் கூட்டு வழிபாடு நடைபெறும்.

அமைப்பாளர் திரு. லெ. மு. மு. முத்துமாணிக்கம்

## பொன். புதுப்பட்டி:
## கலைமகள் நடராசன் செட்டியார் அவர்கள்



செய்யும் தொழிலே தெய்வம் –
அந்தத் திறமைதான் நமது
செல்வம்.

– பட்டுக்கோட்டை
கல்யாணசுந்தரம்

பட்டுக்கோட்டையாரின் மேற் கண்ட கவிதை வரிகளுக்கு ஏற்ப வாழ்பவர் தான் காகிதத் தொழில் செல்வர் கலைமகள் நடராசன் செட்டியார்

இவர் மதுரை நகரத்தார் சங்கத்தின் துணைத்தலைவராக உள்ளார். 1955 ல் நவம்பரில் கலைமகள் பேப்பர் ஸ்டோரை தொடங்கினார். 1981 ல் மெர்குரி பேப்பர் ஏஜென்சிஸ் நிறுவனத்தைத் தொடங்கினார்.

கலைமகள் பேப்பர் ஸ்டோர்ஸ் மதுரையில் புகழ்பெற்ற பேப்பர் ஸ்டோர்ஸ் ஆகும். தனது தனித் திறமையினால், இடைவிடாத முயற்சியால் முன்னுக்கு வந்தவர் கலைமகள் நடராசன் செட்டியார் அவர்கள்.

---

## நகரத்தார் பக்தி நெறி மன்றம்
## முதலாம் ஆண்டு நிறைவு விழா

நாள் : 1-1-1990
கிழமை : திங்கள்
இடம் : மதுரை ராசா முத்தையா மண்டபம்
காலம் : மாலை 5 மணி

குறிப்பு: விளக்கு பூஜை: திருவிளக்கு பூசையில் கலந்துகொள்ள விருப்பம் மிக்கவர்கள் 15-12-89 க்குள் நகர விடுதி அலுவலகத்தில் தங்களது பெயரை பதிவு செய்து கொள்ளலாம்.
குறைந்த பட்சம் ரூ. 5/– கூடுதலாகவும் செலுத்தலாம்.
பக்தி நெறி மன்றத் தலைவர் டாக்டர். எஸ்.சண்முகம் செட்டியார்

---

## அறமனச்செம்மல்
## சோம. இயற்பகைச் செட்டியார் அவர்கள்



இவருக்கு துலாவூர் ஆதினம் ''அறமனச் செம்மல்'' பட்டம் வழங்கியுள்ளது. நானும் 25-11-89 அன்று பொன்னமராவதிக்கு சென்றிருந்த பொழுது இயற்பகைச் செட்டியார் அவர்களை அவரது மில்லில் சந்தித்தேன். இன்முகத்துடன் வரவேற்று, நகரத்தார் இதழுக்கு மூன்று வாழ் நாள் உறுப்பினருக்குரிய கட்டணம் தந்து, செய்திகள் சேகரிக்க தேவையான ஆலோசனைகளையும் கூறினார். தேவையானால் வழிகாட்ட ஆள் ஒருவரையும் கூட அனுப்பி வைப்பதாக கூறினார். இவர் போன்ற பொது மனப்பான்மை மிக்கவர்கள், சேவை உள்ளம் கொண்டவர்கள் நாடாளுமன்றம், சட்டமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கபட்டால் மக்களுக்கு பலன்கள் மிகுதியாக கிடைக்கும். நல்லவர்கள் ஒதுங்குவதால் தான் அரசியலில் தீயவர்கள் நுழைந்து மிகப்பெரும் பதவியை பிடித்து நாட்டையே கொள்ளையடித்து வருகின்றார்கள். இயற்பகைச் செட்டியாரின் சொந்த ஊர் வேந்தன்பட்டியாகும். இவரது தந்தையார் பெயர் சோமசுந்தரம் செட்டியார் அவாகள். திருமண விவரப்புத்தகம் வைத்துக் கொண்டு நம்மவருக்கு வேண்டிய மாப்பிள்ளை பெண்களை தேர்வு செய்து கொடுத்து வருகின்றார். ஒரே வரியில் சொன்னால் இவர் மக்களின் நண்பர்.

---

## P.L.A. சிதம்பரம் அவர்கள்

வலையபட்டி பழ. அ. அண்ணாமலை செட்டியார் அவர்களின் செல்வர் பி. ஏல். ஏ. சிதம்பரம் அவர்கள். நேமங்கோவிலைச் சார்ந்த இவர் பி.எல்.ஏ. பேருந்து, பி.எல்.ஏ. டிரேடர்ஸ் மற்றும் சில நிறுவனங்களின் உரிமையாளர் தஞ்சை மாவட்ட பேருந்து உரிமையாளர்களில் குறிப்பிடத்தக்கவர்களில் இவரும் ஒருவர் 1981 ல் தொழில் தொடர்பாக மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, ஹாங்காங் ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து வந்தார்.

---

# வலையபட்டிக்கு புகழ் சேர்ப்பவர்கள்

## P. L. குப்பான் செட்டியார் அவர்கள்



நல்லபணிகளுக்கு வாரி வழங்குவதையே வழக்கமாக கொண்டவர் குப்பான் செட்டியார் அவர்கள் அவர் செய்துள்ள, செய்து வருகின்ற அறப்பணிகள் நமக்கு இதனைக் எடுத்துக் காட்டுகின்றது. தமிழகத்தில் மதிய உணவுத் திட்டம் தொடங்கும் முன்பே நாள் தோறும் 100 குழந்தைகளுக்கு வலையபட்டியில் தமது இல்லத்திலேயே பகல் உணவு வழங்கும் திட்டத்தை மேற்கொண்டு அதை இன்றும் சிறப்பாக செய்து வருகின்றார். தீபாவளிக்கு 100 சிறுவர், சிறுமியருக்கு இலவச உணவு உடை வழங்குகின்றார். தைப் பொங்கலுக்கு ஆயிரம் ஏழைகளுக்கு அரிசி, வெல்லம் போன்ற பொருட்களை இலவசமாக வழங்கி வருகின்றார். தையல் பள்ளி ஒன்றைத் துவக்கி பெண்களுக்கு இலவசமாக தையல் கற்றுக் கொடுக்க செய்துள்ளார். வலையபட்டியில திருமண மண்டபம் கட்டி அப்பகுதி மக்களின் திருமணம் மற்ற நிகழ்ச்சிகளுக்கு குறைந்த வாடகைக்கு கொடுத்து உதவுகின்றார். இவர் தம் மணிவிழாவின் போது ஆயிரம் பேருக்கு இலவசமாக வேட்டி, சேலை முதலியவற்றை வழங்கினார். தனது உறவினர்கள், நண்பர்கள் பலருக்கும் தொழில்களில் கூட்டு வைத்து பலவகைப்பட்ட தொழில்களை நடத்தி வருகின்றார். கோவை நகரத்தார் சங்கம் பி எல். கே. அவர்களுக்கு தர்மரத்னா என்ற சிறப்புப் பட்டத்தை வழங்கியுள்ளது.

---

## P. L. பழநியப்ப செட்டியார் அவர்கள்

பழநியப்ப செட்டியார் அவர்களின் மூத்த செல்வர் P. L. பழநியப்ப செட்டியார் அவர்கள் இவர் செய்துள்ள நல் பணிகள் பலவாகும். சிவகாசியில் திருமண மண்டபம் கட்டியுள்ளார்கள்.

பழனியப்பா & கோ பேப்பர் கடை இவர்களது நிறுவனமாகும்.

---

# நன்றி

நான் பொன்னமராவதி – பொன்.புதுப்பட்டி – வலையபட்டி சிறப்பிதழ் வெளியிட விரும்பி அவ்வூர் பற்றி செய்திகள் சேகரிக்க 25-11-89 அன்று பொன்னமராவதிக்கு சென்றேன். பொன்னமராவதியில் இயற்பகைச் செட்டியார் அவர்கள் சந்தித்த பொழுது எனக்கு ஊக்கமும், உற்சாகமும் தந்து செய்திகளைச் சேகரிப்பதற்குரிய வழி வகைகளைச் சொன்னார். அந்த பெரியவருக்கும், வலையபட்டி யூனியன் கிளப் பற்றி செய்திகள் தந்த யூனியன் கிளப் செயலாளர் இராம.ந. இராமனாதன் செட்டியார் அவர்களுக்கும், திரு. பிஎல். குப்பான் செட்டியார் அவர்களைப் பற்றி செய்திகளை தந்து உதவிய ரத்னா எஜென்சி கனகசபை அவர்களுக்கும், வலையபட்டி பள்ளிகள், மற்றும் அவ்வூர் நகரத்தார் செய்துள்ள அறப் பணிகள் பற்றி செய்திகளைத் தந்த மதுரை மகால் Social Recreation Club அமைப்பிற்கும், பொன்னமராவதி ஊராட்சி மன்ற பரப்பு, மற்றும் பல விபரங்களைத் தந்த அரசுப் பணியாளர்கள், இனிய பண்பாளர்கள் திருவாளர்கள் M. நாகரெத்தினம் வெங்கிடசாமி, ஆறுமுகம் ஆகியோருக்கும் என் உள்ளம் நிறைந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

வலையபட்டி அருள்மிகு மலையாண்டி கோவில் நிழற் படத்தைப் பெற முயல கடினமாக முயற்சி எடுத்தேன். படம் கிடைத்தது என்னுடைய ஆர்வத்திற்கு ஏற்ப நீங்களும் செய்திகளும், விளம்பரமும் தந்து உற்சாகம் தந்தால் இதழில் உங்களுக்கு நிறைய செய்திகளை கொடுப்பேன். நகரத்தார் இதழின் அடிப்படை நோக்கம் நகரத்தார் சமூகத்திற்கு, ஆலயப் பணிகளுக்கு, கல்விக்கு செய்துள்ள சேவைகளை வெளிபடுத்த வேண்டுமென்பதேயாகும். நல்நோக்கத்திற்கு ஆதரவு தாருங்கள் நகரத்தார் இதழின் மூலதனம் உங்களின் உற்சாகமான ஆதரவேயாகும்.

சுப. செந்தமிழன்

---

பூரணமாக உழைத்துக் கொண்டேயிருந்த எந்த மனிதனும் வருந்தத்தக்க நிலமையை அடைந்ததில்லை.

– லாண்டன்

மிகக் குறைந்ததைக் கொண்டு திருப்தியடைபவனே முதன்மையான செல்வன் ஏனெனில் இயற்கையின் செல்வம் திருப்திதான்

– சாக்ரடீஸ்

## வேந்தன்பட்டி அருள்மிகு நெய்நந்தீஸ்வர பெருமான்



பட அச்சுஉதவி: M. K. R. முத்துராமன்

## நந்தி விருத்தம்

நந்தி எம் பெருமான் தன்னை
நாடொறும் வணங்குவோர்க்கு
புத்தியில் ஞானம் சேரும்
பொலிவுறு செல்வங்கூடும்
சிந்தையில் அமைதி தோன்றும்
சிறப்புறு மக்கள் சேர்வர்
இந்திர போகம் கிட்டும்
இணையிலா வாழ்வு தானே

— நந்திவிருத்தம்

## வேந்தன்பட்டியில் மகா பிரதோஷ விழா

வேந்தன் பட்டியிலுள்ள அருள்மிகு மீனாட்சி – சொக்கலிங்கேசுவரர் திருக்கோயிலில் கார்த்திகை மீ 10 ௳ 25-11 89 சனிக்கிழமையன்று மகாபிரதோஷ விழா சிறப்பாக நடைபெற்றது. அருள்மிகு நெய் நந்தியெம் பெருமானுக்கு சிறப்பாக அபிசேக, ஆராதனைகள் நடந்தது. பெருமளவில் மக்கள் இவ் விழாவில் பங்கு கொணடனர். இங்குள்ள நெய்நந்தி புகழ் பெற்ற நந்தியாகும். இவர் மீது அபிசேகம் செய்யப்படும். நெய் மீது ஈ எறும்பு, மற்ற சீவராசிகள் அனுகாது. இவருக்கு அபிசேகம் செய்யப்பட்ட நெய் பல வருடங்களாக சேமித்து வைக்கப்பட்டுள்ளது. இந்த நெய்க்கிணற்றிலும் ஈ எறும்பு அணுகுவதில்லை. கிணற்றிலுள்ள நெய்யும் நறுமணத்துடன் உள்ளது.

சுப. செந்தமிழன்

# வலையபட்டி - அறப்பணிச் செல்வர்கள்

| பெயர் | அறப்பணிகள் விபரம் |
|---|---|
| 1) சிவ. அ. | — பொன்னமராவதி அமரகண்டான் வெள்ளைப் பிள்ளையார் கோவில் |
| 2) லெ. கா. லெ. | — தொட்டியம்பட்டியில் ஊருணி, முத்து விநாயகர் கோவில் |
| 3) லெ. கா. அ. | — பொன்னமராவதி அமரகண்டான் மேல்கரையில் பசனை மடம், தண்ணீர் பந்தல் |
| 4) ஆ. கரு. | — கொன்னையூர் சாலையில் தண்ணீர் பந்தல் |
| 5) வ. குழ. சுப்பையா | — தணணீர் பந்தல்(செம்பொட்டல்) |
| 6) பு.குமரப்ப செட்டியார் புள்ளப்ப செட்டியார் சிதம்பரம் செட்டியார் | — பசுமடம் (மலையாண்டி கோவில்) |
| 7) க.மு.சு.சி. சின்னையா செட்டியார் | — நகர விடுதி |
| 8) வடு.வயி.வயிரவன்செட்டியார் வடு.லெ.லட்சுமணன் செட்டியார் வடு.நா.நாகப்ப செட்டியார் வடு.வடு.வடுகநாதன் செட்டியார் | வையாபுரி ஊருணி |
| 9) கு.கா.கு.மு.முத்துக்கருப்பன் செட்டியார் | — கந்தர் சஷ்டி விழா மண்டபம் |
| 10) அ.ராம. அ.அண்ணாமலை செட்டியார் மனைவி கல்யாண ஆச்சி | — கல்யாண மண்டபம் |
| 11) சிட்டாள் ஆச்சி அவர் சகோதரர் பெரி.ஏ. அண்ணாமலை செட்டியார் | — ஞானியார்மலை சிட்டாள் ஆச்சிமடம் |
| 12) கு.சுப. வலையபட்டி நகரத்தார் | — கார்த்திகை மடம் |
| 13) கு.கா.கு.அண்ணாமலை செட்டியார் | — நாகராஜ ஊருணி |
| 14) ந.ராம.பெரி.பெரியகருப்பன்செட்டியார் ந.ராம.அ. அண்ணாமலை செட்டியார் ந.ராம.ந.நல்லப்ப செட்டியார் | அடைக்கன் குளம் |
| 15) கு.கா.கு வலையபட்டி ந.பழ.மு. பழ.அ.பழ. | — அடைக்கலங்காத்தார் கோவில், சேங்கை |

16) க.சா. அ.அண்ணாமலை செட்டியார் — க.சா. அ. ஊருணி, லெட்சுமி விநாயகர் கோவில்

17) ந.ராம.அ.பெரி.பெரிய கருப்பன் செட்டியார் — பார்ப்பாயி ஆச்சி மருத்துவமனை

18) அ.மு.நா.நாகப்ப செட்டியார் — அ.மு.நா. சித்திவிநாயகர் கோவில் அதைச்சேர்ந்த குடிநீர் ஊருணி

19) அ.மு.நா.சோமசுந்தரம் செட்டியார் குடும்பத்தினர் — மீனாட்சிசுந்தரேசுவரர் தண்ணீர் பந்தல்

20) வலையபட்டி, பிள்ளையார்பட்டி கோவில் பங்காளிகளில் ஒரு பகுதியினர் — கேசுராபட்டி செல்வமுத்து விநாயகர் கோவில் ஊருணி

நன்றி: கொன்னையூர் அருள்மிகு முத்துமாரியம்மன் ஐம்பதாம் ஆண்டு பூச்சொரிதல் விழா மலர்

---

## வலையபட்டி - யூனியன் கிளப்

### மலையாண்டி மன்றம்

### கொன்னையூர் அருள்மிகு முத்துமாரியம்மன் பூச்செரி விழாவில் பொறுப்பேற்றல்

வலையபட்டி யூனியன் கிளப்பிற்கு புதிய மாளிகை கட்டப்பட்டு அதன் திறப்பு விழா 1977 ல் நடைபெற்றது. இந்த மாளிகைக்கு மலையாண்டி மன்றம் என்று பெயர் சூட்டப்பெற்றது. மலையாண்டி மன்றத்தை சிறப்பாக கட்டி முடித்தவர்கள் திருவாளர்கள் M. V. M. மாணிக்கம். T. ராமநாதன் R. M முத்துக்கருப்பன் ஆகியோர்கள்.

வலையபட்டி திரு. சுப. அருணாசலம் செட்டியார் அவர்களால் 1934 ம் ஆண்டு பங்குனி முதல் வாரம் ஞாயிற்றுக்கிழமை வலையபட்டி நகரத்தார்கள் கொன்னையூர் பூச்சொரிதல் விழாவில் முதன்முதலாக பங்கு ஏற்றனர் திரு சுப. அருணாசலம் செட்டியார் அவர்கள் மறைவிற்கு பின் அவரது செல்வர் திரு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் மலர் விழாவை நடத்தி வந்தார். 1974 ம் ஆண்டு பூச்சொரிதல் விழாவின் முழுப் பொறுப்பையும் யூனியன் கிளப் எடுத்துக்கொண்டது. தன் பொறுப்பேற்றவுடன் பூச்சொரிதல் விழாவை ஒவ்வொரு ஆண்டும் வலையபட்டி யூனியன் கிளப் மிகச் சிறப்பாக நடத்தியது.

## கல்வி நிலையங்கள் - வலையபட்டி

### சித்திவினாயகர் செந்தமிழ்க்கலாசாலை

சித்தி வினாயகர் செந்தமிழ்க் கலாசாலை 11-11-1920 ல் தொடங்கப்பட்டது. அன்றும், இன்றும் இக்கலாசாலை இலவசக் கல்வி வழங்கி வருகின்றது. இப்பள்ளியை திரு. நா. மு. ர்ராம. சொக்கலிங்க செட்டியார் அவர்களும். திரு.நா.மு.ராம.பழநியப்ப செட்டியார் அவர்களும் தோற்றுவித்தனர். இன்று அவர் வழித் தோன்றல்கள் நடத்தி வருகின்றனர். முதல் வகுப்பிலிருந்து ஐந்து வகுப்பு வரை உள்ளது.

### பழநியப்பா நடுநிலைப்பள்ளி

1917 ம் ஆண்டு, பிங்கள ஆண்டு தைத்திங்கள் 5 ம் நாள் பழநியப்ப பிள்ளை அவர்களால் நாமகள் கல்லூரி என்ற பெயருடன் இப்பள்ளி தொடங்கியது. 1919 ல் புதுகை சமசுதான அரசும், அதன்பின் 1948 ல் தமிழ்நாடு அரசும் இப்பள்ளிக்கு அங்கீகாரம் அளித்தது. ஆ. பழநியப்ப பிள்ளை மறைவுக்கு பின் ஆ. பழ. பாலசுப்பிரமணியன் பிள்ளை அவர்கள் கவனித்து வந்தார்கள். அவருக்குப்பின் அவரது செல்வர் திரு. பா. மாணிக்கவாசகம் தலைமையாசிரியராகவும், மேலாளராகவும் இருந்து பள்ளியை கவனித்து வருகின்றார்.

1957 ம் ஆண்டு வரை நாமகள் கல்லூரி என்ற பெயருடன் தொடக்கப்பள்ளியாக இருந்து வந்தது. திரு.குப.சு.பழ. பழநியப்ப செட்டியார் அவர்கள் இந்தப் பள்ளிக்கு இன்று பெரும் பொருட் செலவில் சிறந்ததொரு கட்டிடத்தை அமைத்தந்துள்ளார்கள். 1958 ம் ஆண்டு முதல் பழநியப்பக் கல்லூரி என்ற பெயருடன் இந்த பள்ளி சிறப்பாக இயங்கி வருகின்றது. இப்பள்ளிக்கு பழ.ப.பழநியப்ப செட்டியார் அவர்கள் பழ.அ.அண்ணாமலை செட்டியார் அவர்கள் பழ. குப்பாஞ் செட்டியார் அவர்கள், பழ. சோம. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் ஆகிய நால்வரும் இப்பள்ளியின் வளர்ச்சியில் பெருமளவு பங்கு கொண்டு பள்ளிக்கு பல கட்டிடங்களை அமைத்து கொடுத்துள்ளனர். 1960 வரை தொடக்கப்பள்ளியாக இருந்த இப்பள்ளி 1961 முதல் நடுநிலைப்பள்ளியாக இயங்கி வருகின்றது.

### சிதம்பரம் மெட்ரிக்குலேசன் பள்ளி

தொழில் அதிபர், வள்ளல் அமரர் வ. சிதம்பரம் செட்டியார் அவர்களின் நினைவாலயமாகத் திகழ்வது சிதம்பரம் மெட்ரிக்-குலேஷன் பள்ளியாகும். சிதம்பரம் செட்டியார் தகுதியாக்கப் பள்ளி 1976 ம் ஆண்டு (ஆங்கிலப் பயிற்று முறை) தொடங்கப்பட்டது

இரண்டாண்டுகளில் இப்பள்ளி மாபெரும் பள்ளியான து. 17-2-81 சிதம்பரம் மெட்ரிகுலேசன் பள்ளிக் கட்டிடம் டாக்டர். ராஜா எம். முத்தையா செட்டியார் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது தற்பொழுது இப்பள்ளியில் கிண்டர் கார்டன் செக்சன், பிரைம செக்சன், மிடில் செக்சன் ஆகியவை தமிழக அரசின் அங்கீகாரத்துடன் நடத்தப்படுகின்றது இப்பள்ளியில் 100 மாணவ-மாணவிய பயிலுகின்றனர்.

## வலம்புரி வடுகநாதன் மேல்நிலைப்பள்ளி

வலம்புரி – வடுகநாதன் உயர்நிலைப்பள்ளியை பொன்னமராவதியில் 1944 ஜூன் 22 ல் வடுகநாதர் குடும்பத்தினர் தொடங்கினார்கள் பள்ளி அமைய காரணமாக இருந்தவர்கள்

திரு. வடு. லெ. இலக்குமணஞ் செட்டியார் அவர்கள்
திரு. வயி. வ. வடுகநாதன் செட்டியார் அவர்கள்
திரு. வ. ராம. இலக்குமணன் செட்டியார் அவர்கள்
திரு. வடு. வயி. வடுகநாதன் செட்டியார் அவர்கள்
திரு. வடு. நா. வடுகநாதன் செட்டியார் அவர்கள்

1954ம் ஆண்டு பள்ளியின் புதிய வசதிமிக்க கட்டிடம் மறைந்த தமிழக முதல்வர் திரு. கே. காமராசர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. தற்பொழுது இப்பள்ளியில் 1300 மாணவ – மாணவியர் பயிலுகின்றனர்.

நன்றி: SOCIAL RECRAEATION CLUB
MAHAL III St MADURAI

## பி.எல்.கே. முத்தாத்தாள் ஆச்சி நினைவு அறக்கட்டளை

வலையபட்டியில் பி. எல். குப்பான் செட்டியார் அவர்களது காலம் சென்ற துணைவியார் பி. எல். கே. முத்தாத்தாள் ஆச்சி நினைவு அறக்கட்டளை உருவாக்கப்பட்டது. PL.K முத்தாத்தாள் ஆச்சி நினைவு அறக்கட்டளை சார்பில் ஏழை நூறு மாணவ – மாணவியருக்கு பகல் வேளையில் சத்துணவு வழங்கப்படுகின்றது. இந்த நினைவு அறக்கட்டளை 14-12-1981 ல் தொடங்கப்பட்டது. 31-10-82 ல் வலையபட்டியில் இந்த அறக்கட்டளை சார்பில் இலவச தையல் பயிற்சி நிலையம் திறந்து வைக்கப்பட்டது. இந்த தையல் பயிற்சி நிலையம் வழியாக வசதிக் குறைவான பெண்கள் பெரும் பயன் பெறுகின்றனர்.

# வடுகநாதன் குடும்பம்

பொன்னமராவதி – பொன், புதுப்பட்டி – வலையபட்டி ஆகிய மூன்று ஊர்களிலும் இக்குடும்பத்தை தெரியாதவர் யாருமில்லை. புகழ்பெற்ற இக்குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள் இலங்கையில் வியாபாரம் செய்து பிறந்த மண்ணுக்கு பெருமை சேர்த்தனர். ஐந்து குடும்பங்களை கொண்ட அமைப்பே வடுகநாதன் குடும்பமாகும்.

1) வடு. வயி. வடுகநாதன் செட்டியார்
2) வடு. நாகப்பச் செட்டியார்
3) வ. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார்
4) வடு. லெ. சுப்பையா செட்டியார்
5) வடுகநாதன் செட்டியார்

இக்குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள் பொன்னமராவதியில் வலம்புரி வடுகநாதர் உயர்நிலைப்பள்ளி என்ற பள்ளியை நிறுவி கல்விப் பணி ஆற்றி வருகின்றனர். இந்தப் பள்ளியின் தற்பொழுதையத் தலைவர் V. R. M. N. ராமநாதன் அவர்கள். செயலர் V.R.M.N. நடராசன் அவர்கள் இக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் வலையபட்டியிலுள்ள வையாபுரி ஊருணியை அமைத்தனர். மேலும் அலர்மேலு ஆரம்ப பாட சாலையையும் நிறுவினர். முதன்முதலில் இப்பகுதிக்கு மின்சாரத்தை கொண்டு வந்த பெருமை இக்குடும்பத்தையே சேரும். மேலும் பொன்னமராவதி மருத்துவமனையில் ஒரு வார்டு ஒன்றும் இக்குடும்பத்தினரால் கட்டப்பட்டுள்ளது இக்குடும்பத்தைச் சேர்ந்த வ. ராம. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் M.L.C. ஆக இருந்தவர் இவர். இக்குடும்பத்தைச்சார்ந்த திரு. வடு.லெ.சுப்பையா செட்டியார் அவர்கள் பொன்னமராவதி ஊராட்சி ஒன்றியத்தின் முதல் பெரும் தலைவர் ஆவார். பொன்னமராவதி பேரூராட்சியின் தற்போதைய தலைவர் வலம்புரி முத்து இக்குடும்பத்தின் பேரனாவார். இக்குடும்பத்தைச் சேர்ந்த வடுகநாதன் என்பவர் இயக்குநர் பாரதிராசவிடம் உதவியாளராக இருந்து கடலோரக்கவிதைகள் என்ற படத்தை தயாரித்து உள்ளார் வடு. லெ. சுப்பையா செட்டியார் குடும்பத்தினர் சிதம்பரத்தில் லேனா, வடுகநாதன் என்ற இரு திரையரங்குகளை நடத்தி வருகின்றனர். லேனா திரையரங்கு 1971'ல் மறைந்த தமிழக முதல்வர் M. G. R. அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

இவர்கள் 'இன்றுபோல் என்றும் வாழ்க' வருவான் வடிவேலன் நிறம் மாறாத பூக்கள், சாவித்திரி முதலிய படங்களை தயாரித்து உள்ளனர். இக்குடும்பத்தை சார்ந்தவர்கள் தற்போது மருத்துவம், சினிமா, காகிதத் தொழில், வட்டித்தொழில் முதலியவை செய்து வருகின்றனர்.

வெரு. கண்ணன் B.A
பிளாட் நம்பர் 655, அண்ணாநகர்,
மதுரை-20.

---

## வலம்புரி சோமநாதன்

புகழ்பெற்ற திரைப்பட இயக்குநர். சிறந்த எழுத்தாளர் தென்னிந்திய திரைப்பட உலகில் புகழ்பெற்ற புள்ளிகளில் இவரும் ஒருவர். இவரது பல படங்கள் வெற்றிப் படங்களாகும். இவரால் நகரத்தார் இன மட்டுமல்லாது தென்னகத் திரை உலகமே பெருமை பெற்றுள்ளது.

---



வலையபட்டியில் 12-9-89 அன்று மணிவிழா நடந்த மணிவிழாத் தம்பதியார் வலையபட்டி திரு.ராம.மு.முத்துக்கருப்பன் செட்டியார் திருமதி. இராமாயி ஆச்சியுடன் திருவாளர்கள் மு. தியாகராசன், மு. சிங்காரம், எல். ஜஸ். முத்துக்கருப்பன் ஆகியோர்கள்.

# நமது செய்திகள்

**மணிவிழா:** தேவக்கோட்டை திரு. A.L:A.R.V. காளைராசா செட்டியார் அவர்களுக்கும் மீனாட்சி ஆச்சி அவர்களுக்கும் 60 வது ஆண்டு நிறைவு விழா 14-11-89 வியாழக்கிழமை அன்று தேவகோட்டையில் சிறப்பாக நடைபெற்றது.

**ஆஞ்சநேயர் விழா:** உ. சிறுவயலில் நான்காம் ஆண்டு ஆஞ்சநேயர் பெருவிழா 27-12-89 புதன்கிழமை அன்று சிறப்பாக நடைபெற்றது,

**நாநயா:** நாநயாவின் மூன்றாவது ஆண்டு விழா, பொதுக்குழு கூட்டம் 10-12-89 அன்று பள்ளத்தூரில் ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் மாடியில் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் லிமிடெட்டினால் நாநயா மூன்றாவது ஆண்டு விழா சிறப்பாக நடத்தப்பெற்றது.

**திருவனந்தபுரம் சங்கம்:** 12-11-89 அன்று திருவனந்தபுரம் நகரத்தார் சங்கத்தின் முதலாம் ஆண்டு நிறைவு விழா திருவனந்தபுரம் கிள்ளிப்பாலத்திலுள்ள தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் திரு. எஸ். எம். செல்லப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

**திருமணம்:** 15-11-89 அன்று நெற்குப்பையில் பொன். புதுப்பட்டி மு.சே.சுப. சுப்பையா செட்டியார் அவர்கள் செல்வன் அண்ணாமலைக்கும் நெற்குப்பை முரு. பழ. வி. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் செல்வி அலுமேலுவிற்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது

**கந்தர் சஷ்டி விழா:** 29-10-89 முதல் 6-11-89 வரை தேவகோட்டையில் கந்தர் சஷ்டி விழாக் கழகத்தின் 44 வது ஆண்டு நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றது.

**கும்பகோணம் அறிவிப்பு:** கும்பகோணம் நகரத்தார் சங்கத்தினர் கும்பகோணம் நகரத்தார் முகவரிப் பட்டியல் வெளியிடவுள்ளனர். அதில் நகாத்தார் சங்கங்கள், நகரவிடுதிகள் முகவரிகளை வெளியிட விரும்புகின்றனர். மேற்படி சங்கங்கள் தங்கள் முகவரிகளை K. பழநியப்பன் செயற்குழு உறுப்பினர், நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம், 35A மூர்த்தி செட்டி தெரு, கும்பகோணம் 612001 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

**கூட்டுத்திருமணம்:** திருச்சி நகரத்தார் சங்கத்தின் முயற்சியால் கூட்டுத் திருமணம் 29-01-90 தைத்திங்கள் 16ம்நாள் பிள்ளையார் பட்டியில் நடைபெறவுள்ளது.

# சின்னச் சின்னச் செய்திகள்

1) வலையபட்டி திரு.வ.ராம.லெட்சுமணன் செட்டியார் அவர்கள் இலங்கை இந்திய காங்கிரசின் முதல் தலைவராக பண்டித நேருவால் நியமிக்கப்பட்டார்.

2) பழநி நடைப் பயணம் செல்லும் பக்தர்களுக்கு ஒட்டன் சத்திரத்தில் வலையபட்டி மு. சேதுராமன்செட்டியார் அவர்கள் சுமார் ஐயாயிரம் பேருக்கு உணவு வழங்கி வருகின்றார்.

3) 1944 ல் வலம்புரியில் தமிழிசை மாநாடு நடைபெற்றது.

4) தமிழகத்தில் வித்துவான் வகுப்பில் முதல் வகுப்பில் தேறிய முதல் நபர் வலையபட்டி திரு. வே.அண்ணாமலை செட்டியார் இவரது புனைப் பெயர் ''அலை''

5) பொன், புதுப்பட்டியைச்சார்ந்த சாமி.பழநியப்பனார் அவர்கள் கொழும்பு வீரகேசரி இதழில் பணியாற்றினார். இவருடைய நூல்கள் பேரறிஞர் பெர்னாட்சா மலரும் தமிழகம், பாரதியும் பாரதிதாசனும், காதல் உள்ளம். புரட்சி இலக்கியம்.

6) பொன்னமராவதியை நெடிராச பாண்டியன், நாயக்க மன்னர்கள் முதலியவர்கள் வென்றுள்ளதாக வரலாற்று ஏடுகள் குறிப்பிடுகின்றது.

7) பொன்னமராவதிக்கு கிழக்கே 8 கி.மீ தொலைவில் பூலாங்குறிச்சி உள்ளது.

8) பொன்னமராவதிக்கு தென்கிழக்கே 10 கி. மீ தொலைவில் செவ்லூர் உள்ளது. செவ்லூரில் புகழ்பெற்ற நாச்சியரம்மன் கோவில் உள்ளது.

9) பொன்னமராவதியில் சனி, செவ்வாய் இரு கிழமைகளிலும் சந்தை கூடுகின்றது.

10) பொன்னமராவதிக்கு வடமேற்கே 3 கி. மீட்டர் தொலைவில் பொன்னமராவதி – புழுதிபட்டிச் சாலையில் உலகம்பட்டி அமைந்துள்ளது. செட்டிநாட்டிற்கு கடைகோடியில் உலகம்பட்டி உள்ளது.

11) பொன்னமராவதியிலிருந்து வடகிழக்கில் 4 கி.மீட்டர் தொலைவில் கொப்பனாபட்டி உள்ளது. இங்குள்ள முத்துமாரியம்மன் சக்திமிக்க தெய்வமாகும் இந்தியா லெதர் கார்ப்பரேஷன் தோல் நிறுவனஇயக்குநர் திரு.ஆ.நாகப்பசெட்டியார் அவர்கள் இவ்வூரைச் சார்ந்தவர்.

12) பொன்னமராவதிக்கு தெற்கே 2 கி. மீட்டர் தொலைவில் வேகுப்பட்டி உள்ளது.

13) பொன்னமராவதியிலிருந்து 4 கி.மீட்டர் தொலைவில் புகழ் பெற்ற ப்ரியா மருதீசர் கோவில் உள்ளது. இங்கு ஆடித் திருவிழா சிறப்பாக நடைபெறும்.

14) பொன்னமராவதி ஊராட்சி ஒன்றியத் துணைத் தலைவர் N. அழகு அவர்கள்.

15) பொன்னமராவதி அருகில் சக்தி வாய்ந்த அழகு நாச்சியம்மன் கோவில் உள்ளது.

16) பொன்னமராவதியின் நிரந்தர திரையரங்குகள் அலங்கார் & மீனா திரையரங்கம்

17) பொன். புதுப்பட்டியில் ஐயப்ப புலி நாச்சியார் ஆலயம் உள்ளது இங்கே சுந்தரேச பெருமாள் கோவில் உள்ளது.

18) பொன்னமராவதி அழகிய நாச்சியம்மன் மீது பாடப்பட்ட பாடல்களிலிருந்து இவ்லூர் வரலாறு நமக்கு தெரிகின்றது.

19) இவ்வூருக்கு அண்மையில் மேலச்சிவபுரி உள்ளது. இங்கே 75 ஆண்டுகட்கு முன்பு தொடங்கிய செந்தமிழ்க்கல்லூரி உள்ளது.

20) மேலச்சிவபுரியை அடுத்து வேந்தன்பட்டி உள்ளது. இங்கு புகழ் பெற்ற நெய்நந்தி உள்ளது. வேந்தப்பனம்பலம் பெயரால் உருவாக்கப்பட்டது வேந்தன்பட்டி இந்த நந்திக்கு நாள்தோறும் நெய் அபிசேகம் நடைபெறும். அந்த நெய்யில் ஈ எறும்புகள் மொய்க்காதது குறிப்பிடத்தக்கதாகும்.

21) அஞ்சல் எண்கள்:

| | | |
|---|---|---|
| கொப்பனாபட்டி | – | 622401 |
| வேகுப்பட்டி | – | 622407 |
| மேலச்சிவபுரி | – | 622403 |
| வேந்தன்பட்டி | – | 622419 |

22) பொன்னமராவதி சிவகங்கை நாடாளுமன்றத் தொகுதியாகும்

23) வலையபட்டி நகரவிடுதியில் 21 பேர் டிரஸ்டிகளாக உள்ளனர் ஆண்டு ஒன்றுக்கு நான்கு பேர் விதம் இதை நிர்வாகித்து வருகின்றார்.

---

கண்டனூர் அருளாடியார் பழநியப்ப செட்டியார் இயற்கை எய்தினார்

கண்டனூர் 'சாமியாடிச் செட்டியாரான

ரு. மு சுப. சு. சுப. பழநியப்ப செட்டியார் அவர்கள்

[illegible]-11-89 அன்று தமது 59 ஆவது வயதில் இயற்கை எய்தினார். [illegible]அடியாரான பழநியப்ப செட்டியார் அவர்களின் மறைவிற்கு நகரத்தார் இதழ் ஆழ்ந்த வருத்தத்தை தெரிவித்துக் கொள்கின்றது

## வலையபட்டி நகரத்தார்களுக்கு பாராட்டு

நகரத்தார்கள் ஊர்களிலயே சிறந்த ஊர் வலையபட்டியாகும்
வல்லயபட்டி நகரத்தார்கள் விரிந்த நெஞ்சம் உடையவர்கள
வலையபட்டி நகரத்தார்கள் தொழில் சிந்தனை மிக்கவர்கள்

டாக்டர். எம்.ஏ எம். இராமசாமி

---

## PL. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள்

பழநியப்ப செட்டியார் அவர்களின் நான்கு செல்வர்களில் ஒருவர். P. L. S. M. அவர்கள் வலையபட்டியில் பழநியப்ப செட்டியார் அவர்கள் நிறுவிய பழநியப்பா கல்லூரி என்ற தொடக்கப் பள்ளி இன்றும் சிறப்புடன் இயங்கி வருகின்றது. இவர்களது குடும்பத்தார் பழனியப்பா அன்னமடத்தை பழநியில் நிறுவி ஒவ்வொரு கார்த்திகையின் போது ஏழைகளுக்கு அன்னதானம் செய்து வருகின்றார்கள்

---

## மூ. சே. சுப்பையா செட்டியார் – புதுப்பட்டி

சிங்கப்பூர் நாட்டுக்கோட்டை நகரத்தார் அறப்பணிக்கழகத்தின் செயலாளர் பொறுப்பணிகள், சமூகப் பணிகள் நிறையச் செய்து உள்ளார் கும்பகோணத்தில் ஏஜென்ஸ் கடை வைத்துள்ளார்.

---

**நன்றி** வலையபட்டி அருள்மிகு மலையாண்டிசுவாமி கோவில் படம் கொடுத்து உதவிய வலையபட்டி ராம் சொனாவிற்கு எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

சுப. செந்தமிழன்

---

**திருத்தம்:** சென்ற நவம்பர் இதழில் ''கலங்காதீர் கருப்பென்று'' என்ற பாடலின் கீழ் சமுதாயவிடிவெள்ளி என்று மட்டும் போடப் பட்டுள்ளது, சமுதாயவிடிவெள்ளி ஆ. ஆண்டியப்பத் தேவர் தேவர்முரசு ஆசிரியர் என்று சேர்த்து வாசித்து கொள்ளவேண்டியது

---

## வாசகர் எண்ணங்கள்

அன்புடையீர்

1) காரைக்குடி நகர் சிறப்பிதழில் ஏராளமான செய்திகள் உள்ளன பலருக்கு தெரியாத செய்திகளைக் கூட சேகரித்து தந்துள்ளீர்கள்

சொக்கலிங்கம் – மேலாளர்
மணிவாசகர் நூலகம் – மதுரை

2) எங்கள் ஊரைப்பற்றி எங்களுக்குகூட தெரியாத பல செய்திகளை தேடி சேகரித்து வெளியிட்ட உங்களுக்கு எனது பாராட்டுகள்.

L.K. வெங்கிடாசலம், கோவிலூர் வீதி, காரைக்குடி